# திருவள்ளுவர் நினைவாலயம்

(தவத்திரு. குன்றக்குடி அடிகளார்)

திருவள்ளுவர் நினைவாலயம் நல்ல உயரமான தேர் வடிவில் அமைக்கப் படுகிறது. தேரின் உயரம் 133 சாண் உள்ளதாக அமையும். அதாவது வாழ்க்கை என்ற தேரை வள்ளுவர் ஓட்டக் கற்றுக் கொடுக்கிறார் என்ற தத்துவத்தில் சாண் அளவு எடுத்துக் கொண்டது பழந் தமிழர் மரபு. 133, திருக்குறளில் 133 அதிகாரங்களைக் குறிக்கும். தேரின் விமானம் மூன்று நிலைகளை உடையதாக இருக்கும். அது திருக்குறளின் முப்பாலைக் குறிப்பதாக இருக்கும். தேரின் அடித்தளம் வள்ளுவன் வாழ்த்திய எண் குணங்களை நினைவூட்டும் வகையில் எட்டுக் கோணங்களை உடையதாக இருக்கும். தேரின் அடிப்பாகத்தில் சங்கப் புலவர் 49 பேர்களின் உருவங்கள் அமையும்.

தேரின் அடிபாகத்தில் ஒரு பகுதியில் தற்போது கோயிலில் இருக்கும் திருவள்ளுவர் திருமேனி அப்படியே எழுந்தருளச் செய்யப்படும். இன்னொரு பகுதியில் ஆய்வு அரங்கக்கூடம் அமைக்கப்படும். மற்றொரு பகுதியில் திருக்குறள் பற்றி வெளிவந்துள்ள அனைத்து நூல்களும் தொகுத்து ஒரு நூலகம் வைக்கப்படும். தேரில் 6 அடி உயரத்தில் திருவள்ளுவர் சிலை நிற்கும் தோற்றத்தில் அமைக்கப்படும். இந்தத் திருவள்ளுவர் நினைவாலயத்தைச் சுற்றி 1330 குறள்களும் சலவைக் கல்லில் செதுக்கி வைக்கப்படும். அதிகாரத்திற்கு ஒரு சலவைக் கல் வீதம் 133 சலவைக் கற்களில் பொறிக்கப்படும். ஒவ்வொரு அதிகாரத்தையும் விளக்கக் கூடிய சிற்பமும் செதுக்கப்படும். பொதுவாக நல்ல தமிழ் மணமும் கலைநயமும் மிளிரத்தக்க வகையில் உலகில் எந்தக் கவிஞனுக்கும் இதுவரை அமையாத வகையில் இந்த நினைவாலயம் அமையும்.

இவ்வளவு சிறப்புள்ள நினைவாலயத்திற்கு சுற்றுப் புறங்கள் ஏற்றவையாக இருக்கவேண்டும் அல்லவா? அதனால் சுற்றிலும் உள்ள குடிசைப் பகுதிகளை மாற்றி தூய்மை செய்ய வேண்டும். இதைச்செய்து தர குடிசை மாற்று வாரியத் தலைவர் அரங்கண்ணல் இசைவு தந்திருக்கிறார். இப்படிப் பட்ட நினைவாலயம் திருவள்ளுவருக்கு அமைக்கப்பட வேண்டும் என்று நாம் பல காலமாகவே எண்ணி வந்தோம்.

திருவள்ளுவரிடத்தில் இயற்கையாகவே எமக்கு எப்போதும் ஈடுபாடு உண்டு. ஆனால் பாவேந்தன் பாரதிதாசன் சொன்னது போல நமிழகத்தில் தமிழ் அறிந்த ஒருவர் முதலமைச்சராக அமைந்துள்ள இந்தக் காலத்தில்தான் எமது எண்ணங்கள் ஈடேறி இத்தகைய நல்ல பணி நடைபெற முடிகிறது. திருவள்ளுவர் நினைவாலயம் தோன்றுகிறது. இந்த நினைவாலய அமைப்பைத் தொடர்ந்து திருக்குறளைத் தொடர்ந்து பரப்பவும் திருக்குறள் நெறியை வளர்க்கவும் திட்டமிட்ட பணிகள் மேற்கொள்ளப்படும்.






திங்களிதழ்

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| மணி 1 | பிரமாதீச வைகாசி<br>1973 மே | ஓசை 11 |
|---|---|---|

அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

"அருளோசை"க்கு அடுத்த இதழோடு ஓராண்டு முடியப்போகிறது. கடந்த ஆண்டில் அன்பர்கள் காட்டிய பேரார்வம், இதழை மேலும் சிறப்புற நடத்த எங்களுக்கு ஊக்கம் அளித்திருக்கிறது. சந்தாதாரர்கள் முதலிதழிலிருந்து பெற்றுக்கொண்டவர்கள் உடனடியாக அடுத்த ஆண்டுச் சந்தாவை செலுத்த வேண்டுகிறோம். சந்தா அனுப்பும்போது மணியார்டர் அடிக்கட்டையில் "சந்தா புதுப்பித்தல். சந்தா எண்.......... என்று குறிப்பிட்டனுப்ப வேண்டுகிறோம்.

ஆடி இதழிலிருந்து "அருளோசை" புதுமைப் பொலிவுடன் வெளி வரும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

**"அருளோசை" முதலிதழி லிருந்து பெற்றுக் கொண்டவர்கள் தயவுசெய்து தங்கள் சந்தாவை உடனடியாகப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறோம்.**

## இந்த இதழில்



---

## சென்ற இதழ் விஞவிடைப் பகுதியில் எழுப்பிய பொது அறிவு விஞக்களுக்கு விடைகள்

9. உலகிலுள்ள சமயங்கள் எவை? அவற்றின் பெயர்க்காரணங்களை எடுத்துரைக்கவும்.

சைவம், வைஷ்ணவம், ஜைனம், பௌத்தம், கிறிஸ்துவம், இஸ்லாம், கன்பூசியம், டாயோயம், ஷிண்டோ, சோராஸ்டிரியம் இவை உலகப் பெருஞ்சமயங்கள். சிவனையும், விஷ்ணுவையும் வழிபடுவதால் சைவம், வைஷ்ணவம் என்றபெயர்கள் ஏற்பட்டன. உலகத்திலேயே மிகப் பழைய சமயம் சைவம் என்ருர் சர்ஜான் மார்ஷல். ஜைனம், ஜினர் அல்லது மகாவீரராலும், பௌத்தம் புத்த பகவாஞலும், கிறிஸ்துவம் ஏசுகிறிஸ்துவாலும், முகம்மதியம் அல்லது இஸ்லாம் முகம்மது நபிகளாலும், சோராஸ்டிரியம் சாரதூஷ்டிரராலும், கன்பூசியம் கன்பூசியஸாலும் தோற்றுவிக்கப் பெற்றன. இந்த மதங்கள் அவற்றைத் தோற்றுவித்தவர் பெயர்களால் உண்டானவை. டாயோயம் சீன நாட்டில் லாசே என்பவரால் அமைக்கப் பெற்றது. ஷிண்டோ மதம் ஜப்பானில் தோன்றியது.

10. ஆலய வழிபாட்டின் அவசியத்தைப்பற்றிக் காரணங்கள் கூறி நிறுவுக.

ஆ + லயம் = ஆன்மா ஒடுங்கும் அல்லது லயப்படும் இடம்; ஆணவம் ஒடுங்கும் அல்லது அடங்குமிடம் என்பது பொருள். உருவவழிபாடு இல்லாத சமயத்தினர் உள்பட எல்லாச் சமயத்தினருக்கும் வழிபாட்டுக்கென ஓர் இடம் உண்டு. பூமியினடியில் தண்ணீர் எங்கிருந்தாலும் அதை எடுத்துப் பருக ஒரு கிணறு வேண்டியதுபோல் கடவுள் எங்கிருப்பினும் அவரை வழிபட ஒரு குறிப்பிட்ட இடம் வேண்டும். அதுவே ஆலயம் அல்லது கோயில். மனம் ஒருமைப்படும்; உருவங்களில் மந்திரசக்தி உண்டு; கோயில்களில் பெரியார் தொடர்புண்டு; அகவழிபாட்டை விடப் புறவழிபாட்டில்தான் மனம், வாக்கு, காயம் இவை மூன்றும் பயன்படும்; வலம்வருதல், மலையேறல், தீர்த்தமாடல் முதலியன உடல் நலத்தைச் செம்மைப் படுத்தும்; அதஞல் உடலிலுள்ள உயிரும் நலம் பெறும்; உயிர்க்குயிராயிருக்கும் இறைவனையும் காணலாம்; ஆலய வழிபாடு, ஒருவகையில் நமக்கு உலகப் பொருள் அனைத்தும் படைத்துக் கொடுத்த பேரருளுக்கு நன்றி செலுத்துவதுமாகும். ஞானியர்களாகிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆலய வழிபாடு செய்ததை நாம் பின்பற்றவேண்டும்.




*நல்வாழ்த்துக்கள் !*

சமணர், கடவுள் நம்பிக்கையில்லாத சமயநெறியினர். உலகப் படைப்புக்குக் கடவுள் வேண்டாம் என்பது அவர்கள் கொள்கை. சமணர் கொள்கைப்படி உலகம் படைக்கப் பட்ட தல்ல, ஆதலால் படைப்பாளனும் இல்லை. உலகைப் படைத்தவன் கடவுள் என்றால் அவனைப் படைத்தவர் யார்? எல்லையின்றி ஒன்றன்பின் ஒன்றாகத் தொடரும், அந்த விவாதத்திற்கு ஒரு முடிவு இல்லை. ஆனால் கடவுள் உண்டு என்று நம்பும் சமய நெறியினர் கடவுள் படைக்கப் படாதவன் அவனே பிறவற்றைப் படைக்கிறான், அவனே உலகத்தைப் படைக்கிறான் என்பர். உலகில் படைக்கப் படாத பொருள் உண்டு என்றால் அது கடவுளாகத் தான் இருக்க வேண்டுமா? வேறு பொருளாக இருக்கக் கூடாதா? அந்த படைக்கப்படாத பொருள் உலகமாக இருக்கக் கூடாதா? என்பன சமணரின் வினாக்கள்.

கடவுள் இல்லையென்ற கொள்கை மிகப் பழமையானது. கடவுள் இல்லையென்ற கொள்கை சமயச்சார்பு உலகத்திலே தான் தோன்றியது. அறிவியல் அடிப்படையில் கூறினால் உண்டு என்ற தத்துவக் கொள்கை தொடங்கிய பொழுதே இல்லையென்ற தத்துவக் கொள்கையும் தொடங்கியது. அதுவே இயற்கை. தத்துவ நூல்களைக் கூர்ந்து நோக்கின் கடவுள், உலகம் ஆகிய இரண்டையும் ஒன்றிலிருந்து

மற்றதைப் பெறவைக்க-மற்றதை அடைய முயற்சியெடுத்திருப்பதை அறிய முடிகிறது. உலகத்தை ஆதாரமாகக் கொண்டு கடவுள் உண்டு என்று சொல்லும் பொழுதும், கடவுளை முதலாகக் கொண்டு கடவுளிலிருந்து உலகம் தோன்றிற்று அல்லது உற்பத்தியானது என்று சொல்லும் பொழுதும் சிக்கல்கள் பலவாகின்றன. சிக்கல்களினின்று தப்ப முயன்ற சிலர் கடவுள்-உலகம் ஆகிய இரண்டுமே உள்பொருள் என்று கொள்ளாமல் கடவுள் ஒன்றே உள்பொருள், உலகம் ஒரு பொருளே அல்ல. அஃது ஒரு தோற்றமே என்றனர். வேறு சிலர் உலகம் மட்டுமே உள்பொருள் கடவுள் உள் பொருளே அல்ல என்றனர். இவர்களே சமணர்.

உலகம், கடவுள் இவ்விரண்டையும் தனித்தனியான நிலையான மூலப்பொருள்கள் என்று கொண்டால் என்ன? அங்ஙனம் கொள்ளும் சமயங்களும் உண்டு. அவ்வாறு கொள்வதில் இருக்கிற தலையாய இடர்ப்பாடு கடவுளுக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பு எத்தகையது என்பது பற்றியது. ஒன்றுக்கு மேற்பட்ட பல மூலப் பொருள்களை ஏற்றுக் கொள்ளும் பொழுது அவை ஒவ்வொன்றுக்கும் உள்ள உறவை, தொடர்பை, தராதரத்தை நிர்ணயிப்பதுதான் எளிதில் முடியாதது. என்றும் உள்ள பொருள்கள் பலப்பல. அவை ஒன்றோடொன்று தொடர்புடையன அல்ல என்றால் என்ன? என்ற வினாவையே சென்ற இதழின் இறுதியில் ஆய்வுக்குரியதாக்கினோம்.

ஆதியாய் நிற்கும் கடவுளுக்குப் படைத்தல் தொழில் திடீரென வந்ததன்று. படைத்தலும் அழித்தலும் தொடக்கமும் இடையீடுமின்றி மாறி மாறி நிகழ்வன என்பது ஒரு கொள்கை. கடவுள் வேண்டுதல் வேண்டாமை இலாதவர். அப்படியிருக்க உலகைப் படைத்தது ஏன்? அங்ஙனம் உலகைப் படைக்கும் தொழிலை மேற்கொள்வதால் கடவுள் விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாக மாட்டாரா? அது கடவுளின் நிறைநிலைக்கு-அதாவது பரிபூரண நிலைக்கு மாறானதாகாதா? என்பன சமணர் வினாக்கள். இதற்கு விடையாக மாதவச் சிவஞான முனிவர் கடவுள் உயிர்களின் பொருட்டே ஐந்தொழில் செய்கிறார் என்று அருளிச் செய்துள்ளார்.

வேதாந்திகளோ பிரம்மம் மட்டுமே உள்பொருள் என்பர். உயிர் உடன்பாடன்று. வேதாந்திகள் படைப்பு-பிரம்மத்திற்கொரு விளையாட்டு என்பர்.

கடவுள் உண்டு என்போர் தம் கொள்கையை நிலைநாட்ட அடியிற்கண்டவாறு வாதிடுவர். பானை இருக்கிறது. பானை ஒரு செய்பொருள். அப்படியென்றால் பானையைச் செய்வதற்கு ஒருவன் வேண்டுமல்லவா? அதுபோல் உலகத்தை காண்கின்றோம். இக்காணப்படும் உலகத்தைப் படைத்தோன் ஒருவன் இருக்கத்தானே வேண்டும் என்பர். கூர்த்த மதியுடைய சமணர் இதனை மறுப்பர். குயவன் உருவுடையவன். குயவன் தன் கை கால்களைப் பயன்படுத்தியே பானை செய்கின்றனன். முதல்வனும் அப்படித்தானே என்பர். இந்த வினாவிற்கும் மாதவச் சிவஞான முனிவர் தெளிவான விடையைத் தந்துள்ளார். இயக்கப்படும் பொருளைப் பொறுத்து இயங்கும் பொருளும் அமையும். உடம்பை உயிர் இயங்குகிறது. ஆனால் உயிருக்கு வடிவு இல்லை அங்ஙனமே உயிரை இயக்கும் கடவுளுக்கும் வடிவு இல்லை என்பது மாதவச் சிவஞான முனிவர் விடை. அதற்கு மேலும், பானையையும் குயவனையையும் முன்பு ஒருங்கே கண்டிருந்தால்தான் பானையைக் கண்டவுடன் குயவன் நினைவுக்கு வருவான். அதுபோல உலகத்தையும் உலகத்தைப் படைக்கும் கடவுளையும் முன்பு கண்டிருக்க வேண்டுமே என்று தொடர்ந்து சமணம் வினாவை எழுப்புகிறது. தொடர்ந்து எழுதுவோம்.

குன்றக்குடி அடிகளார்

சிவாச்சாரியர்கள் வளமாக வாழமுடியாது போனாலும், வறுமையில் விழாமல் காப்பது திருக்கோயில்களின் கடமைகளில் ஒன்று. சிவாச்சாரியர்கள் வருகிற பக்தர்களிடம் நேரடியாகக் காசுகளை வாங்க அனுமதிப்பது நன்மரபாகாது. அங்ஙனம் காசுகளை வாங்கிக் கொள்ள அனுமதிப்பதன் மூலம் திருக்கோயில், சிவாச்சாரியர்களைப் பேணும் பொறுப்பிலிருந்து விலகிக்கொள்கிறது. அது, அவர்களுக்கும் நல்லதன்று; திருக்கோயிலுக்கு நல்லதன்று.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.




## மனத்தை ஒழுங்குபடுத்துகிற முறை

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

நினைப்பு என்ற தொழில் இயல்பாக இருவகையானது. ஆனால் உலகியலில் ஒன்றென்றே கூறப்படுகிறது. அதாவது, ஏற்கெனவே தெரிந்த ஒன்றை மறந்து விட்டுப்பின் நினைவுகூர்தலையே பெரும்பாலும் நினைவு என்று கூறுவது மரபாக இருந்து வருகிறது. நம்முடைய இலக்கிய உலகத்தின் கருத்தும் மிகுதியும் அதுவே. திருக்குறள் காமத்துப் பாலில்,

> உள்ளினே னென்றேன் மற்றென்மறந்தீர் என்றென்னைப்
> புல்லாள் புலத்தக்கனள். (1316)

என்று ஒரு குறள் உண்டு. தலைவன், தலைவியைப் பிரிந்திருந்த காலத்தில் நினைத்திருந்ததாகத் தலைவியிடம் கூறுகிறான். தலைவி, நினைத்து நின்ற நேரம் ஒழிந்த எஞ்சிய நேரத்தில் மறந்தீரே என்று கூறி அழுகிறாள். இதன் பொருள் என்ன? மறதியைத் தொடர்ந்து நினைப்பு வருகிறது. "பால் நினைந்தூட்டும் தாயினும்" என்ற மணிமொழிக்கும் இதுவே கருத்து.

ஆனாலும் மனத்தில் மாறாது நிற்கும் இயல்புக்கு நினைவு என்று பொருள் கோடல் தவறன்று. பழகிப் பிரிந்த இருவர் சந்திக்க நேரிடுகின்ற பொழுது "நினைவிருக்கிறதா?" என்று கேட்பதை நாம் அன்றாட வாழ்வில் காண்கின்றோம். நினைவைக் கொல்லும் மறதி, வாழ்க்கையை அழிக்கும் பெரும்பகையாகும். மறதித் தன்மையுடையவர்கள் எந்த ஒரு காரியத்தையும் முறையாகச் செய்யமாட்டார்கள். மறதி காரியங்களைக் கெடுக்கும்; நண்பர்களை இழக்கச் செய்யும். பொருளை இழக்கச்

செய்யும். இத்தகைய கொடிய மறதியை அழித்து வெற்றி வாகை சூடுவது நினைவேயாகும். மறதியைப் புறங்காண நினைவாற்றலை யடைந்து மகிழ என்ன செய்ய வேண்டும்? அதற்குரிய முயற்சி அரிதானது அல்ல; எளிதே!

தான் எண்ணிச் செய்யும் செயல்களில் ஒருமைப் பாட்டுணர்வுடன் ஈடுபட வேண்டும். அடுத்து எதையும் எவ்வளவு இடர்ப்பாடுகள் இருந்தாலும் குறித்த நேரத்தில் குறித்த முறையில் செய்ய வேண்டும் காலம் தவறிச் செய்யும் கடமைகளும், முறைதவறிச் செய்யும் கடமைகளும், ஆர்வ எழுச்சியுடன்-இலட்சியத் துடிப்புடன் செய்யப் பெருத கடமைகளும் மறதிக்கு துணை செய்யும் களன்கள். இதுவரை, தெரிந்த ஒன்றை நினைவிற்கொள்ளவும் அல்லது மறதி வாராதிருக்கவும் வழி வகை கண்டோம்.

மனத்தின் அடுத்த மிக நுட்பமான தொழிற்பாடு எண்ணுதல் என்பதாகும். எண்ணுதல் நினைவிற்கும் முந்திய தொழிற்பாடாகும். சிந்தனை, தொடர்ந்துவரும் தொழிற்பாடாகும். எண்ணுதல் என்பது ஒரு குறிப்பிட்ட காரியத்தை அடைய வேண்டும் அல்லது செய்ய வேண்டும் என்று அலைவின்றி எண்ணுவதாகும். இன்று நம்மில் பலர், "நினைத்துக் கொண்டுதான் இருந்தேன். தவறி விட்டது; எப்படியோ தவறி விட்டது." என்று பல தடவை சொல்லி அழுகின்றனர்.

எப்படித் தவறிற்று என்று கேட்டால் மீண்டும் விடை கிடைக்கும்" எப்படியோ தவறி விட்டது என்று! ஒருசிலர், வேலை மிகுதியால் தவறிவிட்டது என்பர். இது தவறு. வேலை மிகுதியால் காரியங்கள் தவற முடியாது, வேண்டுமென்ருல் ஒத்திப் போடலாம். இங்கேயும் ஓர் ஆபத்து உண்டு. ஒத்திப்போடுதல் என்பது வேலை மிகுதியினுலும் உண்டு. சோம்பேறித் தனத்தினுலும் உண்டு. வேலை மிகுதியினுல் ஒத்திப் போடுபவர் எண்ணிக்கை மிகக் குறைவு. காரியத்தின்பாலுள்ள அலட்சியப் பார்வையினுலும் சோம்பேறித் தனத்தினுலுமே பலர் ஒத்தி போடுகின்றனர்.

எண்ணுதல் என்பது வாழ்க்கையின் வெற்றி அனைத்திற்கும் அடிக்கல் போல் அசைவதாகும். எண்ணத்தில் தெளிவும் உறுதியும் இருக்குமாஞல் காரியங்கள் தவரு. இன்று பலர் அழுது புலம்புகின்றனர். ஏன்? நினைத்தபடி காரியங்கள் நடக்கவில்லையே என்று' எண்ணத் தெரியாதவர்கள்-அதே பொழுது பழிதூற்றும் இயல்பினர் தங்களுடைய காரியக் கேட்டுக்கு அவர் காரணம், இவர் காரணம் என்று பிறர்மேல் பழிதூக்கிப் போடுவர். ஆனுல் வள்ளுவர், ஒருவரின் வெற்றிக்கும் தோல்விக்கும் அவரவர் காரணமே தவிர மற்றவர்கள்

அமைய முடியாது என்கின்ருர். எண்ணியதை யாதொரு குறையுமின்றி எண்ணியபடியே அடையலாம் என்பது வள்ளுவர் கருத்து.

எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்.

எண்ணிய எண்ணியாங்கு பெற வேண்டுமென்ருல் எண்ணத்தில் திண்மை யிருக்கவேண்டும். இன்று யாருக்குத்தான் எண்ணம் திண்ணியதாக இருக்கிறது. இன்று பலருக்கு நொய்ந்து கிடக்கிறது; சபலங்களால் சலித்துக் கிடக்கிறது; தன்னயத்தால் தளர்ந்திருக்கிறது; சுகவுணர்வில் சோர்ந்து கிடக்கிறது. ஐயோ, பாவம்! வயிறு பசிக்காது போனல் அவர்களுக்கு உணவைப் பற்றிக் கூட நாட்டமிருக்காது. இத்தகையோர் வாழ்கிருர்கள், அல்லர்; பிழைப்பை நடத்துகிருர்கள்; மற்றவர்க்கும் சுமையாக இருக்கின்றனர். ஏன்‘ எண்ணத்தெரியாத காரணமே! ஏன் எண்ணத் தெரியவில்லே? வாழ்க்கைக்கு நோக்கம் கற்பித்துக் கொள்ளவில்லே. மனத்தை மட்டும் கடமைகளேச் சுற்றி எண்ணப் பழகி விட்டால் இந்த உலகத்தில் நடவாதது எது?



## திருமழிசையாழ்வார்

வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,

உலகு மழிசையு முள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்கோலாற் றூக்க—உலகுதனை
வைத்தெடுத்த பக்கத்தெம் மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

'தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்ற முதுமொழிப்படி கல்வி, கேள்வி, அறிவு ஒழுக்கங்களால் சிறந்த சான்றோர்கள் தோன்றிய தொண்டை நாட்டிலே 'திருமழிசை' என்னும் திருப்பதியொன்றுண்டு. முன்பொருகால் முனிவர்பலர் இப்பூவுலகில் பெருந்தவமியற்றிப் பேறு பெற, ஏற்ற இடம் தேடிப் பிரமனிடம் சென்று தேர்ந்து கூற வேண்டினர். அப்பிரமனும் அவர்களுடைய வேண்டு கோளுக்கிணங்கி, உலகத் திருத்தலங்களை யொரு தட்டிலும், 'திருமழிசை'யை யொரு தட்டிலும் வைத்துச் சீர்தூக்கிப் பார்த்தபொழுது 'திருமழிசை'த் தட்டுமேலெழாமல் வலிதாகி நின்றதாம். அது பற்றி 'மஹீசாரம்' 'திருமழிசை' என்று பெயர் பெற்றது. இவ்வூரில் பார்க்கவ முனிவருக்குக் கனகாங்கி யென்பவளிடம் தோன்றியவர் நம் திருமழிசையாழ்வார்.

இவ்வாழ்வார் தைமாத மக நட்சத்திரத்திலே பிறந்தார். பிறக்கும் பொழுது ஒரு பிண்டமாய் மட்டும் இருந்தமையால் பெற்றோர் அப்பிண்டத்தை ஒரு பிரப்பம்புதரடியில் வைத்து விட்டுச் சென்று விட்டனர். பின் இறையருளால், அப்பிண்டத்தினின்றும் எல்லா உறுப்புக்களும் தோன்ற, ஒரு சோதி வடிவான குழந்தை வெளிப் போந்து அழுதது. அப்பொழுது அங்குப் பிரம்பறுக்க வந்த திருவாளன் (வேளாளன்) குழந்தையின் அழுகுரலைக் கேட்டு, அங்கே யாருமில்லாத காரணத்தால், அக்குழந்தையைத் தன் அகத்தே கொண்டு சென்று மனைவியிடம் கொடுத்து விளைவைக் கூறினன். மகப்பேறு இல்லாத அவளும் மகிழ்ந்து, அக்குழந்தையை அன்போடு வளர்த்து வந்தாள். முனி குமாரராகையாலே இளம் பருவத்திலேயே, பிரம்மவித்தையிலும்-வேதாந்தவிழுப்பொருளிலும் நாட்டங்கொண்டு பயின்று வந்தார். தமது ஏழாவது ஆண்டுக்குள் யோகக் கலையிலும் தேர்ச்சிபெற்று யாவரும் வியக்கும் வண்ணம் மெய்ஞ்ஞானக் கலையில் சிறந்து விளங்கினர். இவ்வதிசயத்தைக் கண்டு அவ்வூரார் ஆழ்வாரைத் தெய்வாமிசமாகக் கருதி வழிபட்டனர்.

ஆழ்வாரும் அட்டாங்க யோகத்தில் மிக நாட்டமுடையவராய், அதற்கு மூலகாரணப் பொருளாய் விளங்கும் மூர்த்தியை அறிய, உலகில் விளங்கும் பலவாய சமயங்களிலும்-சமய நூல்களிலும் ஆழ்ந்து ஆராயலானார். வேதத்துக்குப் புறம்பான புறச்சமயங்களேயும், வேதத்தை ஏற்றுக் கொண்டு பொய்யுரைகளைக் கூறிவந்த உட்சமயங்களையும் ஓதியுணர்ந்து முடிவில் திருமால் சமயமே (வைணவமே) எல்லாவற்றையும்விட உண்மையான-ஏற்றம் பொருந்திய சமயம் என்று உணர்ந்தார், 'இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்' என்று அறுதியிட்டுக் கொண்டு வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை அறிந்தார்.

"சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோம் சங்கரனார்,
ஆக்கிய ஆகம நூலாராய்ந்தோம்—பாக்கியத்தால்
செங்கட் கரியானைச் சேர்ந்தோம் யாந்தீதிலமே
எங்கட் கரியதொன் றில்"

என்று பிறசமயங்களை ஆராய்ந்து அவைகளின் பயனற்ற தன்மைகளைக் கூறி முடிவில் திருநின்ற பக்கமான செங்கட்கரியானைச் சேர்ந்ததில் பெருமை பெற்றதாகக் கூறியுள்ளார்.

இவ்வாழ்வார் சாக்கிய-சமண-சைவ சமயங்களில் சிலகாலம் ஆழ்ந்து பயின்று, முடிவில் திருமால் சமயமான வைணவமே சிறந்தது என்று என்று தேறி, அச்சமயத்தில் நெடுங்காலம் பற்றோடும்-பக்தியோடும் இருந்தவர்.

இத்திருமழிசையாழ்வார் இவ்விதம் திருமால் பக்தியிலே மேம்பட்டு-யோக முறைகளிலும் தேர்ந்து ஒரு குகையில் தவமிருந்த பொழுது, முதலாழ்வார்களாகிற மூவரும் இவரைக் கண்டு வணங்கவும் இவரும் அவர்களைத் தண்டனிடவும் அவர்களில் மூன்றாமவரான பேயாழ்வாரிடத் சில உபதேசங்களைக் கேட்டு அவரைத் தம் குருவாகவும் கொண்டு போற்றினார். பின்பு ஆழ்வார் திருமழிசையிலிருந்து புறப்பட்டுத் 'திருவெஃகா'வை அடைந்து, அங்குப் பொய்கையாழ்வார் அவதரித்த பொய்கைக்கரையின்மேல் தவமிருந்து வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தனை பெருமானைத் தியானம் செய்து வந்தார். அப்பொழுது கணிகண்ணர் என்னும் தமிழ்ப்புலவர் இவரைச் சரணடைந்து பல உபதேசங்களைப் பெற்றுப் பயனுற்றார். ஆழ்வார் தவமியற்றி யோகத்தில் ஆழ்ந்திருக்கும் காலத்தில் முதியவளொருத்தி ஆழ்வாரிடம் பக்தி கொண்டு, அவர் தவச்சாலையைத் தினமும் மெழுகிக் கோலமிட்டுத் தொண்டு செய்து வந்தாள். ஒருநாள் ஆழ்வார் திடீரென்று கண் விழித்தவாறே, அங்கு பக்தியோடு பணிவிடை செய்யும் அம்முதியவளைக் கண்டு மகிழ்ந்து உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டார். அவளும் என் முதுமையை நீக்கி இளமையும் எழிலுமுடைய பருவ நங்கையாக்கியருள வேண்டுமென்ற அற்பமான வரத்தைக் கேட்டாள். ஆழ்வாரும் தம் யோக பலத்தால் அவளுக்கு இளமையை அளித்தார். உடனே அவள் அவ்வூர் அரசனிடம் சென்று தன் அழகாலே அவனை

வசப்படுத்தி இன்புற்று வந்தாள். ஆனல் அரசனே நாளுக்கு நாள் வலிமை குறைந்து முதுமையடைந்து வந்தான். அவன் தன் காதல் கிழத்தியை உனக்கு எப்படி இந்த இளமை வந்தது என்று கேட்டான். அதற்கு அவள் ஆழ்வாருடைய பெருமையைக் கூறி அவரால் பெற்ற பேறு தான் என்ருள். மேலும் உம் ஆத்தானப்புலவரான கணிகண்ணரிடம் ஆழ்வாருக்கு நிரம்ப அன்புண்டு என்றும், அவரைக் கொண்டு நீரும் ஆழ்வாரை வரவழைத்து இளமை பெறலாம் என்றும் ஆலோசனே கூறினள். உடனே அரசனும் கணிகண்ணரை வரவழைத்து ஆழ்வாரைத் தம் அரண்மனேக்கு அழைத்து வருமாறு உத்தரவிட்டான். அதற்குக் கணிகண்ணர் ஆழ்வார் பெரிய யோகியும், ஞானியுமாவார், நம் விருப்பப்படி அவர் வரமாட்டார் என்று பதில் கூறினர். அதனல் சினமடைந்த அரசன் அக்கணிகண்ணரை ஒறுக்க வேண்டுமென்று திட்டமிட்டான். தம்மைப் புகழ்ந்து பாடும்படிகூறினன். அதற்குக் கணிகண்ணர் மறுத்தார். உடனே அவரைத் தன் நாட்டை விட்டு வெளியேறும்படி உத்தரவிட்டான். உடனே கணிகண்ணரும் ஆழ்வாரைத் தண்டனிட்டு நடந்ததைக் கூறிப் புலம்பினர். அப்பொழுது ஆழ்வாரும் நீர் இவ்வூரை விட்டுப் புறப்பட்டால் நாமும் இங்கு இருக்க கில்லோம்; நாம் புறப்பட்டு விட்டால் இத்திருவெஃகாவில் அரவணேத் துயிலும் பெருமாளும் இங்கிரார். அப்படிப் பெருமாளும் நம் பின்னே வந்து விட்டால் மற்ற ஊராரும் பெருமாளேத் தொடர்ந்து வந்துவிடுவர். அரசன் மட்டுமே இருக்கட்டும் என்று ஆறுதல் சொல்லித் திருவெஃகா வில் துயிலும் பரமன் முன் சென்று அவரைப் பார்த்து

கணிகண்ணன் போகின்ருன் காமருபூங் கச்சி
மணிவண்ணு நீ கிடக்க வேண்டா - துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.

என்று விண்ணப்பம் செய்தார். அந்த எம்பெருமானும் இவர் சொன்ன வண்ணமே பாம்பணேயைச் சுருட்டிக் கொண்டு இவர் பின்னே புறப்பட்டார். இவ்விதம் ஆழ்வாரும், கணிகண்ணரும் பெருமாளும் புறப்படவே இராமனேப் பிரிந்த அயோத்திபோல கச்சியம்பதியே பொலிவிழந்து, செடி கொடிகளெல்லாம் வாடி வதங்கவே அரசனும், அமைச்சர்களும் மிகவும் வருந்தி "ஓரிரவிருக்கை' என்ற கிராமத்திலே கணிகண்ணரும் ஆழ்வாரும் பெருமாளும் தங்கியிருக்கக் கண்டு அவர்களுடைய பாதங்களிலே அரசனும் மற்றவர்களும் வீழ்ந்து வணங்கிக் குற்றம் பொறுத்தருள வேண்டும், மீண்டும் நகரத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று வேண்டினர். கணிகண்ணரும் ஆழ்வாரிடம் வேண்ட, ஆழ்வாரும் பெருமாளிடம் சென்று,

கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணு நீ கிடக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயு முன்றன்
பைந்நாப் பாய் படுத்துக் கொள்.

என்று வேண்டினர். எம்பெருமானும் மீண்டெழுந்தருளினர், இவ்விதம் தமிழ்ப்பாட்டிற்கு ஏற்றபடி— சொன்னபடி செய்தமையால் அப்பெருமாள் இன்றும் "சொன்னவண்ணம் செய்த பெருமாள்" என்றே கொண்டாடப்படுகிறார். இதனல் தமிழிடமும்-தமிழ்ப்புலவரிடமும் திருமாலுக்கிருந்த வேட்கை புலப்படுகின்றதன்றோ? இன்றும் வைணவ ஆலயங்களில் தெய்வத்தமிழ்தான் இறைவனுக்கு முன்னே ஓதப் படுகிறது. ஆரியவேதம் இறைவனுக்குப் பின்னே தொடர்கிறது. இதைக் கண்டு தான் குமரகுருபர சுவாமிகளும்" பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்று போற்றினர். அத்திரு வெஃகாவில் சிலகாலம் தவசியற்றிப் பின்பு ஆழ்வார் திருக்குடந்தை (குடும்ப கோணத்து)க்குச் சென்று ஆராவமுதனைக் கண்டு வணங்க வேண்டுமென்ற வேட்கையால் புறப்பட்டுச் சென்றார்.

செல்லும் வழியில் சில வேதியர்கள் வேதமோதிக் கொண்டிருந்தனர், இவரைப் பார்த்தவுடன் இவர் காதில் வேத மந்திரம் விழக் கூடாதென்று நிறுத்திவிட்டனர். இவர் சில வடிகள் கடந்தவுடன், எந்த இடத்தில் வேதபாராயணத்தை விட்டோம் என்று தெரியாமல் விழித்தனர். இதைக் கண்ட ஆழ்வார் அவர்கள் உணரும் படியாக அங்கு உலர்த்தப் பட்டிருந்த கருப்பு நெல்லை நகத்தால் உரித்துக் காட்டினர். உடனே வேதியர்கள் அதிலிருந்து பொருள் உணர்ந்து விட்ட இடம் விளங்கிடவே தொடர்ந்தனர். (கிருஷ்ணும் வ்ரீஹிணும் நகநிர்பின்னம்) என்ற வடமொழி வாக்கியப் பொருளையுணர்ந்து ஆழ்வார் எடுத்துக் காட்டினர். இதிலிருந்து இவர் வேதத்தை மாத்திரமன்றி அதன் பொருளையும் நன்கு உணர்ந்தவர் என்பது நன்கு தெரிகிறது.

மேலும் பெரும் புலியூரடிகளது யாக சாலைக்குச் சென்று அங்கிருந்த வேள்வி செய்யும் அந்தணர்களின் செருக்கையடக்கித் தம் இதய கமலத் தில் உள்ள இறைவனை யாவர்க்கும் காட்டி உய்வித்தார். இவ்விதம் செயற்கரிய செயல்களாலே மக்களை நல்வழிப்படுத்திய ஆழ்வார் நான் முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் என்ற இரண்டு அழகிய திவ்வியப் பிரபந்தங்களை உலகுய்ய அருளிச் செய்துள்ளார். இவரது திருச்சந்தவிருத்தத்தைச் செவியுற்ற ஆராவமுதாழ்வார் (திருக் குடந்தைப் பெருமாள்) அரவணையிலிந்து எழுந்ததாகவும், அப்பொழுது "வாழிகேசனே" என்று இவ்வாழ்வார் வாழ்த்தியதாகவும் பெரியோர் கூறுவர். இவ்வாழ்வார் அவதரித்த திருநாளை மாமுனிவன் வாக்கால் போற்றுவோம்.

தையில் மகமின்று தாரணியீர் ஏற்றம்-இந்தத்
தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன்—துய்யமதி
பெற்ற மழிசைப் பிரான் பிறந்த நாளென்று
நற்றவர்கள் கொண்டாடும் நாள்.




## " இருவகை விஞ்ஞானங்கள் "

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

முன்னுரை :

முழுமை, பொதுமை, திருத்தம், ஒழுங்குபாடு, அளவுபடுத்துதல் ஆகியவைகளைக் கொண்டது விஞ்ஞான அறிவு என்பதைச் சென்ற கட்டுரையிற் கண்டோம். இத்தகைய அறிவைத் தருகின்ற விஞ்ஞானங்களை ஆன்ருேர் இரண்டு வகையாகப் பிரிப்பர். இரண்டு வகை விஞ்ஞானப் பிரிவுகளையும் பிரித்தறிதல் அறிவாராய்ச்சியியலை நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவதற்குத் துணை செய்யும். எல்லா விஞ்ஞானப் பிரிவுகளும் முழுமையும் பொதுமையும் திருத்தமும் ஒழுங்குபாடும் அளவுபாடும் கொண்ட அறிவையே மக்களுக்கு வழங்குகின்றன ஆயினும், அவற்றுள்ளும் நுட்பமாக அமைந்துள்ள வேறுபாடு ஒன்றும் உண்டு என்பதை இக்கட்டுரையிற் காணலாம்.

எடுத்துக் காட்டு :

இருவகை விஞ்ஞானங்களுக்கும் உரிய அடிப்படை வேறுபாட்டினை ஓர் எளிய எடுத்துக்காட்டின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.

மாலை நேரம்; மங்கிய ஒளி; வேலியின் ஓரம்; வளைந்து கிடக்கும் ஒரு பொருள்; அப்பொருளைக் கண்ட ஒருவன் பாம்பு என்று அஞ்சி ஓடுகிருன்.

நிகழ்ச்சி ஒன்று தான். இதனைக் கண்ட இருவகை விஞ்ஞானிகளும் எவ்வாறு செயல்படுகிருர்கள்? என்பதை அறிவதன் மூலம் இருவகை விஞ்ஞானங்களுக்கும் உரிய வேறுபாட்டினை உணரலாம்.

(1) "கீழே ஒரு பொருள் கிடந்தது. பார்த்து ஓடிய மனிதனின் விழித்திரையை அது கவர்ந்தது. விழித்திரையில் படிந்த உருவம் உணர்ச்சியாக மாற்றங் கொண்டது. அவ்வுணர்ச்சியானது பார்வை நரம்பின் மூலம் மூளைக்குச் சென்றது. அங்கே சில இயக்கங்கள் ஏற்பட்டன. அவற்றின் விளைவாக உடம்பில் சில மாற்றங்கள் உண்டாயின. இவைகளே அவன் ஓடுவதற்குக் காரணம். அவன் ஓடும்போது

உண்டாகும் உடல் மாற்றங்கள் இவை இவை" என இப்படிப்பட்ட செய்திகளை முறையாக விரித்துக் கூறுவதை ஒருவன் மேற்கொள்ளுகிறான்.

(2) மற்றொருவன் மேலே குறிப்பிட்ட செய்திகளில் கருத்தைச் செலுத்தாமல் வேறு வகையில் ஆராய்கிறான். மேலே குறிப்பிடப்பெற்ற செயல்கள் பொதுவானவை எனக்கருதி, அவைகளை விட்டு விடுகிறான். பயன் பற்றிய ஆராய்வை மேற்கொள்ளுகிறான். அவன் ஆராய்ச்சி யானது கீழே கொடுக்கப்பெற்ற முறையிற் செல்லுகின்றது.

மாலைநேரம், வேலி ஓரம் ஆனமையால் கிடந்த பொருள் உண்மை யிலேயே பாம்புதானா? ஓலை கூட அவ்வாறு கிடக்கலாமே! பயந்து ஓடிய வன் பெற்ற அறிவு உண்மையானதா, பொய்யானதா? பிழையான அறிவு உண்டாவதற்கு உரிய காரணம் என்ன? இவ்வாறு அவன் ஆராய்கிறான்.

முதலாமவன் ஆராய்ந்த முறையானது செயல் நிலை விளக்கம் என்று கூறப்பெறும். இரண்டாமவன் ஆராய்ந்த முறை 'மதிப்பீட்டு விளக்கம்' என்று கூறப்பெறும். இவ்விருவகை ஆராய்ச்சிகளிலும் நமக்கு முழுமையும், பொதுமையும், 'திருத்தமும், ஒழுங்குபாடும், அளவுபடுத்த லும் அமைந்த விஞ்ஞான அறிவே கிடைக்கின்றது. எனினும் இவ்விரு வகை ஆய்வு முறைகளும் தத்தம் நோக்கங்களில் வேறுபடுகின்றன என்பதைக் காணலாம்.

இருவகை விஞ்ஞானங்கள்:

பொருள்களின் தன்மையை அல்லது பொருள்களிடத்திற் காணப் பெறும் செயல்நிலைப் படிமுறையை வரைப்படுத்தி, முறைப்படுத்திக் கூறுகின்ற விஞ்ஞான அமைப்புக்களை (முதலாமவன் செய்த ஆய்வு முறையைப் போன்றவை) இயல்பு விளக்க விஞ்ஞானம் (Descriptive Science) என்றும், பொருள்களின் உண்மை இருப்பு நிலைகளை விரித்துக் கூறுகின்ற காரணத்தால் அவைகளை இருப்புநிலை விளக்க விஞ்ஞானம் (Positive Science) என்றும் பெயரிட்டழைப்பதுண்டு.

இனி, இரண்டாம் வகையான ஆய்வு முறையைப் பின்பற்றும் விஞ்ஞானங்களை மதிப்பீட்டு விஞ்ஞானம்' (Normative Science) என்று பெயரிட்டழைப்பர். பொருள்கள் எப்படி இருக்கின்றன? அவைகள் எப்படிச் செயல்படுகின்றன? எனக் கூறுவதை நோக்கமாகக் கொள்ளா மல், பொருள்கள் செயல்கள் ஆகியவைகளை மதிப்பீடு செய்து, பொருள்கள் எங்ஙனம் இருக்க வேண்டும்? (What ought to be?) நிகழ்ச்சிகள்-செயற்பாடுகள் எங்ஙனம் நிகழ வேண்டும் எனக் கூறுவதை நோக்கமாகக் கொண்டு செயல்படுவதால் இத்தகைய விஞ்ஞானங்கள் உயர்நிலை விஞ்ஞானங்கள் (Normative Sciences) எனவும் கூறப்பெறும்.

வேதியியல், பௌதிகவியல், தாவரவியல், வானியல் போன்றவை இக்காலத்தில் பொதுவாக விஞ்ஞானம் என்று கூறப் பெறுகின்றன. இவைகள் எல்லாம் பொருள்களின் இருப்பு நிலைகளைப் பற்றிய அறிவைத் தருபவை. ஆதலின் இருப்புநிலை விஞ்ஞானங்கள் (Positive Sciences) என்றும், பொருள்களை விளக்கிக் காட்டும் தன்மை உடையவை ஆதலின் விளக்கநிலை விஞ்ஞானங்கள் (Descriptive Sciences) என்றும் இவைகள் இயற்கை பொருள்களைப் பற்றியன ஆதலின் இயற்கைநிலை விஞ்ஞானங்கள் (Natural Sciences) என்றும் கூறப்பெறும். உள்ளத்தியல் (Pshychology) இவ்வகையைச் சார்ந்ததே.

அறவியல் (Ethics), அழகியல் (Aesthetics), அளவையியல் (Logic), அறிவாராய்ச்சியியல் (Epistemology), இலக்கண இயல் (Grammer) போன்றவை உயர்நிலை விஞ்ஞான வகைகள். அற இயலானது உயர்ந்த அறத்தின் தன்மையை மதிப்பீடு செய்து, அதனை அறக்குறிக்கோளாக அமைத்துக் காட்டி, அத்தகைய உயர்நிலை அறத்தை அடைய, குறிக்கோள் அறத்தை அடைந்து நிற்க, மக்கள் எவ்வாறு நடக்க வேண்டும்? என எடுத்தியம்புவதால் உயர்நிலை விஞ்ஞானமாகிறது. மேலும் அது உயர்ந்ததும் குறிக்கோளாக அமைந்ததும் ஆகிய அறத்தை முடிந்த முடிபாக வைத்துக் கொண்டு, ஒரு தனிப்பட்ட மனிதன் நிற்கும் அறநிலையை மதிப்பீடு செய்கிறது. ஒருவனை நல்லவன் என்றும் தீயவன் என்றும் மதிப்பீடு செய்ய இத்தகை விஞ்ஞானங்களால் முடியும்.

இவ்வாறே அழகியல், அளவையியல், இலக்கணவியல் ,போன்றவைகளையும் அமைத்துக் கொள்க. ஒருவனை உயர்நிலைக்கு அழைத்துச் செல்லும் ஆற்றல் இத்தகு விஞ்ஞானங்களுக்கு உண்டு. அறவியல் ஒருவனை உயர்ந்த அறவாளனுகவும், அழகியல் ஒருவனை உயர்ந்த அழகு இது என்பதை உணர்ந்து செயற்பட்டு அத்தகைய அழகுடையவனுக ஆகவும், அளவையியல் ஒருவனைத் தவறுபடாமற் சிந்திக்கும் ஆற்றல் உடையவனுகவும், இலக்கணவியல் ஒருவனைத் தவறுபடாமல் எழுதும் வன்மை உடையவனுகவும் செய்யும் வன்மையுடையன என்பதை அறியலாம்.

உயர்நிலை விஞ்ஞானத்தின் அமைப்பை மதிப்பீடு செய்ய முற்பட்ட நமதருமைத் தமிழ்ச் சான்ருேர் ஒருவர், அதன் பெருமையை வியந்து நம்மை உயர்வுகளுக்கெல்லாம் உயர்வு எனப்பெறும் முத்திவரை அழைத்துச் சென்று விடுகின்ருர்.

“ எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னுகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும் ”

விஞ்ஞானமும் கலையும் :

அறவியல், அழகியல், அளவையியல் போன்றவைகள் பொதுவாகக் கலைகள் என்று பேசப்பெறுகின்றன. 'கலை' என்ற சொல்லுக்குப் பற்பல விளக்கங்கள் கூறப்பெறுகின்றன. 'மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்ற தலைப்பில் ஒரு சில செய்திகளை முறைப்படுத்தி அறிந்து கொள்வதற்காக ஒரு வேறுபாட்டை அமைத்துக் கொள்ளுதல் நலம் பயக்கும். இத்துறையில் சென்ற சான்றோர்கள் அமைத்த பாதை அது.

பௌதிக நூலறிஞர் ஒருவர் நீரின் அமுக்கம் நீரில் மிதக்கும் தன்மை முதலியவைகளைப் பற்றி மணிக்கணக்காகச் சொற்பொழிவு செய்வார். ஆனால் அவரைச் சமுத்திரத்தில், கரையிலிருந்து ஒரு கல் தொலைவில் இறக்கி விட்டுக் கரைக்கு வரும்படி கூறினால் வருவார் என்று நிச்சயமாகக் கூற முடியாது. ஆனால் நீரின் அமுக்கம் முதலியவை பற்றி விஞ்ஞான அமைப்பில் தெரிந்து கொள்ளாத செம்படவன் எளிதில் நீந்திக் கரைக்கு வந்து விடுவான். முன்னவர் அறிஞர்; பின்னவன் கலைஞன்.

மேலே கூறப்பெற்ற விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு நோக்கினால் உயர்நிலை விஞ்ஞானங்கள் என்று சொல்லப்பெறுகிற அறவியல், அழகியல், அளவையியல், அறிவாராய்ச்சியியல், இலக்கணவியல் போன்றவைகள் முழுமை, பொதுமை, திருத்தம், ஒழுங்குபாடு, அளவுபடுத்துதல் போன்றவைகளைக் கொண்ட அறிவைத் தருபவை ஆகையால் விஞ்ஞானம் என்றும், தத்தம் துறைகளில் உயர்நிலைகளை, குறிக்கோள்களை எடுத்துக்காட்டி மதிப்பீடு செய்வதால் உயர்நிலை விஞ்ஞானம் என்றும், செயல் முறைகளையும் எடுத்துக்காட்டி, ஒருவனை அத்துறையில் ஈடுபட்டுச் சிறக்க, வழிவகை செய்வதால் 'கலை' என்றும் அமைக்கப் பெறுகின்றன என்பதை உணர்தல் வேண்டும்.

முடிவுரை :

இருவகைப்படும் விஞ்ஞானங்கள் இவை இவைஎன மேலே குறிப்பிடப் பெற்ற வாற்றால் அறியலாம். உள்ளத்தியல் (Psychology) இருப்புநிலை விஞ்ஞானத்தைச் சார்ந்தது; அறிவாராய்ச்சியியல் (Epistemology) உயர்நிலை விஞ்ஞானத்தைச் சார்ந்தது என்பதை அறிக.

> தமிழகத்தின் சமயநெறி, மிகப்பழமையான நெறி. ஆனாலும் தத்துவச் செழுமையால் அது, உயிர்ப்பற்ற பழமையாக இல்லாமல், பின்னைப் புதுநெறியாகவும் விளங்குகிறது.
>
> —தவத்திரு. அடிகளார்




# காலனைக் காலாற் கடிந்த கடவுள்
## (காலசம்மாரமூர்த்தி)

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

உலகம் துன்பம் நிறைந்தது. "துயர் இலங்கும் உலகு" என்பது திருஞானசம்பந்தர் தேவாரம். "இன்னாது அம்ம இவ்வுலகம்" என்பது புறநானூறு. இங்ஙனம் துன்பமே நிறைந்த உலகியல் வாழ்க்கையில், நாம் எய்தும் துன்பங்கள் எல்லாவற்றிலும் பெரிதும் அஞ்சத்தக்கதும், மிகவும் கொடியதுமாக இருப்பது இறப்புத் துன்பமேயாகும். இறப்புத் துன்பம் எத்தகைய கொடுமை வாய்ந்தது என்று சொல்வது எளிதன்று, பிறப்புத் துன்பத்தினைவிட இறப்புத் துன்பமானது, எத்துணையோ மடங்கு மிகவும் கொடுமையானது என்று நூல்கள் கூறுகின்றன.

தாயுமானவர் :

இறப்புத் துன்பம் ஒன்று உண்டு என்பதை, யாவரும் அவ்வப்போது நினைந்து உணர்ந்து நடந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாததாக இருக்கின்றது. மிகப் பெரிய ஞானிகளும் கூட, இறப்பை நினைந்து அஞ்சி இரங்குகின்றனர். இறப்பினை நினைத்தாலே நெஞ்சம் பகீர் என்கின்றது; அவ்வச்சத்தால் உறக்கமும் வருவதில்லை; இரவிலும் பகலிலும் இதனையே நினைந்து நினைந்து அஞ்சி வருந்துவதினால், எரியிடைப் பட்ட மெழுகைப்போல, உடல் இளைத்து உருகுகின்றனர் ஞானிகள்.

"வஞ்ச நமன் வாதனைக்கும், வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி, உனை அடைந்தேன் ஐயா! பராபரமே"

—பராபரக்கண்ணி.

"இறப்பொடு பிறப்பை யுள்ளே எண்ணினால் நெஞ்சது பகீர் எனும்
துயில் உறாது இருவிழியும்; இரவு பகலாய் செந்தழலில்
மெழுகானது அங்கம்; இவை என்கொலோ?

—சின்மயானந்தகுரு.

எனத் தாயுமானசுவாமிகள், அருளிச் செய்திருத்தல் காணலாம். "தத்துவம் என்பது இறப்பைப் பற்றிய எண்ணமே" (Philosophy is the Consideration of death) என்று, பிளேட்டோ (Plato) என்னும் கிரேக்கநாட்டுத் தத்துவஞானி கூறியிருப்பதும், நாம் இங்குச் சிந்தித்து உணரற்பாலது.

கம்பர் :

நாம் ஒவ்வொருவரும் என்றேனும் ஒருநாள் இறக்கவே போகின்ேறாம். இறவாமல் ஒருவரும் இருக்கப் போவதில்லை. "தோற்றம் உண்டேல் மரணம் உண்டு" என்பர் சுந்தரர். "பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும் புதுவது அன்று" என்பது சிலப்பதிகாரம். ஆதலின் இறப்பு என்னும் மிகப் பெரிய கொடிய துன்பம், நம் அனைவருக்கும் என்றேனும் ஒருநாள் வந்துறுதல் திண்ணம் என்பதனை, நாம் ஒவ்வொருவரும் மறவாமல் அவ்வப்போது நினைத்து உணர்ந்து நடந்து கொள்ளவேண்டுவது, நம் கடமை. இறப்பு ஒன்று உண்டு என்னும் உண்மையை மறப்பதனைக் காட்டிலும் நமக்கு மிக்க கேடு பயப்பது வேறொன்றுமில்லை.

இறப்புஎனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்புஎனும் அதனின் மேற் கேடு மற்று உண்டோ?

—அயோத்தியாகாண்டம்

எனக் கம்பர், தசரதனின் கூற்றில் வைத்து இறப்பின் கொடுமையினைப் புலப்படுத்தியிருக்கின்றார்.

ஐயடிகள் காடவர்கோன் :

அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவரும், பல்லவர் குலத்தில் தோன்றியருளிய நல்லபெருமன்னவரும் ஆகிய ஐயடிகள் காடவர்கோன் என்னும் அருட்பெருஞ் சான்றோர், அல்லல் தருவது எனத் தம் அரசாட்சியினைத் துறந்து, அண்டர்பிரான் அமர்ந்தருளும் ஆலயங்கள் பலவும் கண்டு இறைஞ்சினார். தாம் பணிந்து மகிழ்ந்த தலங்கள் ஒவ்வொன்றையும் குறித்து, உயரிய அழகிய வெண்பா ஓரொன்றால் வழுத்தினார். அப்பாடல் "சிவத்தலத் திருவெண்பா" என்னும் பெயரில். பதினொன்றும் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளன. அதன்கண் ஒவ்வொரு பாடலிலும், ஐயடிகள் காடவர்கோன், இறப்புத் துன்பத்தின் கொடுமைகளையே எடுத்தோதி, இறைவனைப் பணிந்துய்யுமாறு நமக்கு அறிவுறுத்தியருளியிருக்கின்றார்.

சிதம்பரசுவாமிகள் :

திருப்போரூர்ச் சந்நிதிமுறை இயற்றிய, சிதம்பரசுவாமிகள் அவர்களைத், தமிழுலகமும் சமயவுலகமும் நன்கறியும். அவர்கள் தம்முடைய நூலின் பாடல் ஒன்றில், இறப்புத் துன்பம் நேரும் வேளையில் நிகழும் இன்னல்களை எடுத்துச் சொல்லி, அத்தகைய இன்னல்கள் ஏதும் நேராமல் தம்மைக் காத்தருளுமாறு, திருப்போரூர் முருகன் சந்நிதியிற் பணிந்து முறையிட்டுக் கொள்கின்றார். அப்பாடல் நாம் அனைவரும் கூட நாடோறும் ஓதி இறைவனைப் பணிந்து விண்ணப்பித்துக் கொள்ளத்தக்க சிறப்புடையதாக மிளிர்கின்றது.

"நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடவாமல் பாவியேன்-காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கிஎனை ஒண்போரூர் ஐயா! நின்
சீர்அடிக்கீழ் வைப்பாய் தெரிந்து.

சிதம்பர சுவாமிகள் வேண்டிக் கொண்டிருத்தல் போல, நாம் நோய்கள் பல உற்று நலியப் பெருமலும், கவலைகள் பல அடைந்து மனம் நொந்து வாடி வருந்தாமலும், படுத்த படுக்கையாகப் பல நாட்கள்

கிடந்து துடித்துப் பரிபவப் படாமலும், நல்லபடியே இன்னல் எதுவும் இன்றி இறையுணர்வோடும், மனநிறைவோடும் நம் உயிர் நீங்கப் பெறுவதை விரும்புவோமாயின், அப்பேறு குறித்து "அப்போதைக்கு இப்போதே" காலசம்மார மூர்த்தியினைப் பலகாலும் பணிந்து வழிபடுதல் நலம் பயக்கும்.

மார்க்கண்டேயர் வரலாறு :

சிவபெருமான் காலனைக் காலால் கடிந்து, கால சம்மார மூர்த்தியாகத் தோன்றி, மார்க்கண்டேயர் என்னும் முனிவருக்கு அருள் செய்தார். அவர் வரலாறு பின்வருமாறு : முன்னொரு காலத்தில் குச்சகர் என்னும் முனிவர் கடகம் என்னும் நகரத்தில் வசித்து வந்தார். அவருக்கு கவுச்சிகர் என்னும் ஒரு புதல்வர் இருந்தார். இளமையிலேயே அவர் கொண்டிருந்த தவஒழுக்கம் கண்டு வியந்து, திருமால் அவருக்கு மிருகண்டூயன் எனச் சிறப்புப் பெயர் அளித்துப் பாராட்டி வாழ்த்திச் சென்றார். பின்னர் அவர் தம் தந்தையின் விருப்பப்படி, அநாமயம் என்னும் வனத்தில் வாழ்ந்து வந்த உசத்தியர் என்னும் முனிவரின் புதல்வியாகிய விருத்தை என்பவளை மணந்து கொண்டு வாழ்ந்து வரலாயினர். இருவருக்கும் மிருகண்டு என்னும் புதல்வர் தோன்றினர். அவர் திருமணப் பருவம் அடைந்ததும், முற்கலர் என்னும் முனிவரின் புதல்வி மருத்துவதி என்பவளை மணந்து கொண்டார்.

மிருகண்டு முனிவருக்கும், மருத்துவதி அம்மைக்கும் திருமணம் ஆகி நெடுநாள் கழிந்தும், மகப்பேறு வாய்க்கவில்லை. ஆதலின் மிருகண்டு காசிக்குச் சென்று சிவபிரானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். சிவபெருமான் வெளிப்பட்டு, பதினாறு வயதுடைய நன்மகன் ஒருவன் உனக்குத் தோன்றுவான் எனக் கூறி மறைந்தார். அவ்வாறே மருத்துவதியம்மை கருவுயிர்த்து, பங்குனி மாதமும் ரேவதி நட்சத்திரமும் பொருந்த மிதுன ஓரை கழிந்து, கடக நல்லோரை வர சுக்கிரனும் குருவும் தமக்குரிய உச்சராசிகளிலும், செவ்வாய் புதன் சனி ராகு கேதுக்கள் ஆகியோர் தத்தமக்குரிய சிறந்த இடங்களிலும் நிலைகளிலும் அமர, சூரியனும் சந்திரனும் மீனராசியில் கூடியிருந்த ஒரு நல்ல நாளில் ஒப்புயர்வற்ற ஓர் ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தனர். பிரமதேவர் தோன்றி, அக்குழந்தைக்கு மார்க்கண்டேயர் என்று பெயரிட்டுச் சென்றார்.

குழந்தை வளர்ந்து, ஐந்து வயது நிரம்பியது. கலைகள் பயிலத் தொடங்கியது. வேதாகம நூல்களை யெல்லாம் மிக விரைவிற் கற்றுத் தேர்ந்தது. சிவம் முயன்று அடையும் தெய்வக்கலை பல ஓதிய அத் தெய்வச் சிறுவன், சிவபக்தியிலும் சிவவழிபாட்டிலும் சிறந்து விளங்கினான். அதனால் தாய் தந்தையர்கள், அவனை ஈன்ற பொழுதிலும் பெரிதும் மகிழ்ந்து இன்புற்றனர். ஆயினும் சிறுவனுக்கு வயது ஏற ஏற, பதினாறும் வயது நெருங்க நெருங்க தாய் தந்தையர்கள் கவலை கொள்ளத் தொடங்கினர். கவலையின் காரணத்தைத் தந்தை தாயர் பால் வற்புறுத்திக் கேட்டுத் தெரிந்து கொண்டான் மைந்தன் !

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்"

என்னும் உண்மையினை யுணர்ந்தான். தவத்தினால் அடைய முடியாததும் ஒன்றுண்டோ? தவம் செய்து இறையருள் துணைகொண்டு, தாய் தந்தையரின் கவலையைப் போக்க மார்க்கண்டேயன் துணிவு கொண்டான்.

காசியம் பதிக்குச் சென்றான். அங்கே மணிகர்ணிகை என்னும் புனித இடத்தை அடைந்தான். சிவபிரானை நோக்கித் தவம் புரிந்தான். சிவபிரான் காட்சி தந்து, "தெற்கே தமிழ்நாட்டில் உள்ள திருக்கடவூர் என்னும் தலத்தை அடைந்து எம்மை வழிபட்டுக் கொண்டிரு. நினக்கு எமபயம் நேராது" என்று கூறி மறைந்தார்.

அவ்வாறே மார்க்கண்டேயர் திருக்கடவூர் என்னும் சிவதலத்தை அடைந்து, சிவபிரானை முறைப்படி வழிபட்டுக் கொண்டிருந்தார். பதினாறும் ஆண்டு தொடங்கி, அது நிறைவுபெறும் காலமும் நெருங்கிக் கொண்டிருந்தது. அந்நிலையிற் காலதூதன் ஒருவன், இவர்தம் உயிரை வவ்விச் செல்ல வந்தான். அவனால் இவரை அணுகவும் முடியவில்லை. திரும்பிச் சென்று, காலனிடம் செய்தியைக் கூறினான்.

காலன் சீற்றங் கொண்டு, தன் கணக்கர்களாகிய சித்திரன், குத்திரன் என்பவர்களை அழைத்து, மார்க்கண்டேயரின் ஆயுள்பற்றிய கணக்கினை உசாவினான். பதினாறு வயது நிறைவுற்றமை அறிந்து, மறுமுறையும் ஏவலர்களை அனுப்பிப் பார்த்தான். அவர்களும் வறிதே திரும்பினர். அது கண்ட கூற்றுவன் மிக்க சீற்றங் கொண்டான். பாசம் தண்டம் சூலம் மழு முதலிய படைகளை ஏந்திக் கொண்டு, எருமையூர்தியின் மீது ஏறிப் புறப்பட்டான். திருக்கடவூர் சென்று, மார்க்கண்டேயர் எதிரில் நின்று அச்சுறுத்தி அதட்டி அழைத்தான். அவரோ சிவபிரானைத் தியானித்துக் கொண்டு, சிவலிங்கத் திருவுருவினைச் சிக்கெனக் கட்டித் தழுவிக் கொண்டிருந்தார்.

அந்நிலையிற் கூற்றுவன் தன் பாசக் கயிற்றினை எடுத்து வீசி, மார்க்கண்டேயரையும், அவர் தழுவியிருந்த சிவலிங்கத்தையும் ஒருசேரப் பற்றி ஈர்க்க முற்பட்டான். கூற்றுவனது செருக்கும் அகந்தையும் கண்ட சிவபெருமான், சிவலிங்கத் திருமேனியினின்று வெளிப்பட்டுத் தமது இடது திருவடியினால், அவனைச் சிறிதே எற்றி உதைத்தார். இங்ஙனம் சிறிதே எற்றி உதைத்த அளவில், கூற்றுவன் கீழே விழுந்து இறந்தொழிந்தான். மார்க்கண்டேயர் என்றும் பதினாறு வயது உடைவராய், இறவாமல் இருக்கும் இன்பப்பேறு பெற்றார். இறைவன் பின்னர்த் தேவர்களின் வேண்டுகோளின்படி, கூற்றுவனை உயிர்பெற்றெழச் செய்து, "இனி எம்முடைய அடியவர்கள் பக்கலில், நீ அணுகுதலும் செய்யாது அஞ்சி நடந்து கொள்க! உய்ந்து செல்க" என விடை கொடுத்தார்.

திருவள்ளுவர் :

கால சம்மார மூர்த்தியின் பெருமையினைத் தேவாரத் திருமுறைகளில் நம்முடைய சமயாசிரியர்கள், எத்துணையோ பல பாடல்களிற் குறிப்பிட்டு விதந்தெடுத்து வியந்து போற்றியுள்ளனர். தெய்வப் புலவர் திருவள்ளுவர் பெருமானுங்கூட, மிகவும் வியந்து போற்றிக் குறிப்பிட்டருளியுள்ளார்.

"கூற்றங் குதித்தலும் கைகூடும், நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"

என்பது திருக்குறள், சமயப் பொதுநோக்கம் கொண்டவர் எனப்படும் திருவள்ளுவர் தாமே, சிறந்தெடுத்துத் திறந்தெரிந்து குறிப்பிட்டுப் போற்றினர் எனின், காலசம்மார மூர்த்தியின் பெருமையைக் கட்டுரைத்தல் எளியதோ?

கம்பர் :

காலசம்மார மூர்த்தியின் மேன்மையிற் சிறந்த மேன்மை வேறென்றில்லை என்று, கம்ப நாடரும் தமது இராமகாதையின்கண் இராமபிரானின் வாய்மொழி வாயிலாகச் சிறந்தெடுத்துக் கூறிப் போற்றி மகிழ்கின்றார்.

"நஞ்சினை மிடற்று வைத்த நகைமழு வாளன், நாளும்
தஞ்சென முன்னம் தானே தாதைபாற் கொடுத்துச் சாதல்
அஞ்சினேன் அபயம் என்ற அந்தணற் காக, அந்நாள்
வெஞ்சினக் கூற்றை மாற்றும் மேன்மையின், மேன்மை
யுண்டோ?"

முடிவுரை :

" இறப்பொடு பிறப்பை எண்ணினால் நெஞ்சம் பகீர் எனும்; இருவிழியும் துயிலுறாது; எரியிடை மெழுகு போல உடல் இளைத்து இரவு பகல் உருகும்" எனக் கூறும் தாயுமானவர், "இனி எனக்குப் பயம் இல்லை அன்பர்களும் பயப்படவேண்டா, மார்க்கண்டேயர் உயிரைக் கவரவந்த மறலி (எமன்) என்ன பாடுபட்டான் என்பதை நினைத்துப் பார்த்தால் நமக்குப் பயமும் உண்டாகுமோ? என்னும் கருத்தமைய,

"மார்க்கண்டர்க் காகஅன்று மறலிபட்டபாட்டை, உன்னிப்
பார்க்கின், அன்பர்க்கு என்ன பயங்காண்? பராபரமே"

எனப் பாடி மகிழ்கின்றார். ஆதலின் காலசம்மார மூர்த்தியாகிய சிவபெருமானின் திருவடிகளை நாம் அன்புடன் பணிந்து வழிபட்டு வந்தால் மார்க்கண்டேயனுக்குப் போல, நமக்கும் மரணபயமும் மரணவேதனையும் இல்லாமல் ஒழியும் என்பது திண்ணம்.

—:o:—

# "அருளோசை"

## வினு விடைப் பகுதி—ஏப்ரல்-73

## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு : செல்வி. கு. புனிதவல்லி, திருமுட்டம், தென்னார்க்காடு மாவட்டம், சந்தா எண் 572.

இரண்டாம் பரிசு : திரு. மீ. சீனிவாசன், திருவாடானை இராமநாதபுரம் மாவட்டம், சந்தா எண் 1837.

மூன்றாம் பரிசு : திரு. ப சுப்பிரமணியம், தூத்துக்குடி, நெல்லை மாவட்டம் சந்தா எண் 465.

நான்காம் பரிசு : திரு. கி. சுப்பராமன், 10, ஸ்பிரிங் ஹேவன்ரோடு, சென்னை–1 சந்தா எண் 846.

சிவமயம்

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருநாள்வழிபாடு

## ஞானம் + சம்பந்தம்

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார். அந்நிலையில் (70)
(சேக்கிழார் நாயனுர்)

இப்பெரிய புராணத் திருப்பாடலின் உண்மைப் பொருளை உணர்தல் சைவர் எல்லார்க்கும் பேரின்பம் அடையும் துணையை உணர்வதாகும்.

ஞானம் எனப் பலவற்றையும் வழங்குதல் இக்காலத்திற் பயின்ற வழக்காய் விட்டது. சைவத்திற் சிறப்பாகச் சிவஞானத்தையே வழங்கு வது மரபு. ஞானம் பரஞானம் அபரஞானம் என இருவகைப்படும். அபரஞானத்தை முந்தியும் பரஞானத்தைப் பிந்தியும் அறிவதே தெளிவுறும் வழியாகும். ஆகவே சேக்கிழார் பெருமானும் அதையே முந்தியருளினுர்.

அபரஞானம் இத்திருப்பாடலில் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் எனப்பட்டது இதுவே உவமையிலாக் கலைஞானம்.

பரஞானம் பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் எனப் பட்டது. அதுவே உணர்வரிய மெய்ஞ்ஞானம்.

இவ்விருவகை ஞானத்தையும் உமாபதிசிவம் அருளியவாற்ருல் அறியலாம். “உயர் ஞானம் இரண்டாம், மாருமலம் அகல; அகலாது மன்னு போதந் திருவருள் ஒன்று” (பரஞானம்). “அதனை (அத்திரு வருளை)த் தெளிய ஓதும் சிவாகமம் ஒன்று” (அபரஞானம்).

இவ்வாசிரியர் திருவுருள்ளத்தை நாம் நன்குணர்தல் வேண்டின், பரஞானத்தைத் திருவருண்ஞானம் என்றும், அது நம்முள்ளே போத ரூபஞானமாக உள்ளது என்றும், அப்போதருபமாயுள்ள ஞானமே உணர்வுக்கு உணர்வாயிருப்பது என்றும் தெளிதல் வேண்டும். இதை ‘உள்ளொளி’ என்று திருமுறைகளும் சைவசாத்திரங்களும் கூறு கின்றன.

அபரஞானம் சிவாகமப் பொருளுருவாகிய ரூபமாகவுள்ளது. அது „வேதசாத்திர மிருதி புராண கலைஞானம் விரும்பசபை வைகரியாதித்

திறங்கள் மேலாம் நாத முடிவான எல்லாம் பாசஞானம்" என்றதின் வேறுபடும். பாசஞானமும் அபரஞானமும் ஒன்ருமோ? பலர் அறியாமையால், சிவாகம ஞானத்தின் நிலெ தெரியாமல் வேதசாத்திராதியொடு வைத்துப் பேசுதலும் எழுதலும் உபதேசம் பெருத குற்றத்தால் என்க.

அபர ஞானேபாசனேயை மெய் கண்ட நூலில், மேல் வருமாறுணர்த்தியருளினர் நம் ஆசிரியர்.

"ஞானநூல் தனே ஓதல் ஓது வித்தல்
நற்பொருளேக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்ரு
ஈனமிலாப் பொருள தனேச் சிந்திதல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழின் ஞானபூசை."

என்றருளினுர் அருணந்தி தேவநாயனுர்.

இதில் இறைவனடி என்றது பரஞானத்தை. அதை அடைவது பூசைசெய்த பக்குவியாய ஆன்மா. அடைவிப்பது அபரஞானம். அது நூலுருவும் நூற்பொருளுருவுமாக இருப்பது. நூலுருவை உபாசிப்பது ஓதலும் ஓதுவித்தலும் ஆகிய இருதிறத்திலும் நூற்பொருளே உபாசிப்பது கேட்பித்தலும் கேட்டலும் சிந்தித்தலுமாகிய முத்திறத்திலும் ஆகும். ஆகவே பரஞானத்தின் உபாசனேக் கிரமத்தின் வேறு அபர ஞானத்தின் உபாசனேக் கிரமம் எனல் இனிது விளங்கும். ஞானபூசை ஞானத்தால் அர்ச்சிப்பது. யாரை? அரனே. ஞானத்தை உபாசிப்பது. ஞானத்தால் அரனே அருச்சிப்பது இரண்டும் தம்முள் அந்தரங்க பேதம் உடையன. இறைவனடியை அடைவிக்கும் எழில் ஞானபூசை மேலான ஞானுர்ச்சனே, கன்மார்ச்சனேயினும் தபார்ச்சனேயும், அதனிலும் ஜபார்ச்சனேயும், அதனினும் தியாநார்ச்சனேயும் உயர்ந்தன. அவை உயர்ந்தனவாயினும் போகம் பயப்பனவே அன்றி வீடு நல்குவன அல்ல. ஆனமையால், அவற்றின் மேலான ஞானத்தால் அரனே அருச்சிப்பர். எவர்? வீடு எய்த அறிந்தோர் எல்லாரும். ஞானம் ஒன்றே வீடு பயக்கும். ஏனேய கன்மம், தவம், ஜபம், த்யாநம் எல்லாம் ஞான சாதனமாகலாம். மோட்சசாதனமாகா. 'ஞானத்தால் வீடு என்றே நான்மறைகள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல'லே அறிக.

வீடு பயக்கும் ஞானம் எனப் பொதுவாகச் சொல்லினும் அபரஞானமானது பரஞானம் சாதனம். பரஞானமே மோட்சாதனம் ஆகுஞ் சிறப்புடையது. அபரஞானம் பதிபசுபாசம் தெரித்தல் உடையது, இவ்வுண்மையைச்

'சன்மார்க்கம் சகலகலே புராணவேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள் பலவும் கீழாக, மேலாம்
பதிபசுபாசம் தெரிந்து'

என அபரஞானத்தையும் பரசிவனைக் காட்டும் நன்மார்க்கஞானம் என அபரஞானத்தையும் ஆசிரியர் உணர்த்தியருளினர். ஈண்டு 'ஞானம்' அவ்விரண்டற்கும் பொது. பதிபசுபாசந்தெரிக்கும் ஞானம் பரசிவனைக் காட்டும் ஞானம் எனப்பொருள் கொள்ளல் அறிஞர் கடனாகும். 'பலகலையாகமவேதம் யாவையினும் கருத்துப் பதிபசுபாசம் தெரித்தல்' எனச் சிவப்பிரகாசத்திலே அபரஞானத்தையுணர்த்தியவாறு உணர்க. எண்ணரிய ஞானபாதம் கூடுமவர் தமக்கு உணர்வாய் நின்ற ஞானம் எனப் பரஞானத்தையுணர்த்தியவாறும் உணர்க. 'கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும்' என முறையே பரஞானத்தையும் அபரஞானத்தையும் அவ்வாசிரியரே பாயிரத்தில் அருளினர். பரஞானோபாசனையைச் சிவஞானசித்தியாருள், 'பரசிவனைக் காட்டும் நன்மார்க்கஞானம்' என்றுணர்த்தியபின், அதனைக்

கேட்டலுடன் சிந்தித்தால் தெளிதல் நிட்டை
கிளத்தலென ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்

என நூல்வேறாக உபதேசித்தருளினர் ஆசிரியர். இதைச் சிவப்பிரகாசத்திலும்

முந்திய வொருமையாலே மொழிந்தவை கேட்டல், கேட்ட
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அதுதா னாகை
விந்தவா றெய்த நிட்டை மருவுதல் என்று நான்ககம்
இந்தவா றடைந்தோர் முத்தி எய்திய இயல்பி னோரே,

என்றறிக. அபரஞானோபாசனைத் திறத்தைச் சிவதருமோத்தரம், தணிகைப் புராணம் வீரசைவ நூல்கள் முதலியவற்றினும் ஒரே வகையில் உணர்த்துகின்றன. பரஞானோபாசனையும் வேறுபடல் இல்லை. இன்றேனும் சைவத்திறத்தின் உட்கோள் அவற்றில் இல்லை. செயப்படு பொருளில் எல்லாம் சைவத்தின் வேறாகின்றன. ஞான நூல் ஓதல் முதலியனவும் அன்னவேயாம். இதுகாறும் எழுதியவாற்றால்,

(1) சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் ஆகிய உவமையிலாக்கலைஞானமும்

(2) பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய, (பர) ஞானம் ஆகிய உணர்வரிய மெய்ஞ்ஞானமும் சீகாழிப்பிள்ளையார் அடைந்தமையால் திருஞானசம்பந்தராயினர். இவ்வுண்மையே, சேக்கிழார் பெருமான்

"யாவருக்குந் தந்தைதாய் எனும் இவர் இப்படி அளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையாய் அகில
தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும்
தாவில் தனிச் சிவஞானசம்பந்தர் ஆயினர்" (69)

என அருளினர். இத்தகைய சிவஞானசம்பந்தம் உற்ற சைவசமயாசிரியர் திருவடியை வழிபட்டுச் சிவஞானம் பெற்றுப் பேரின்ப வீடெய்துதல் சைவர் எல்லார்க்கும் தலையாய கடனாகும்.




## திருவிடந்தைக் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

தொண்டை நாட்டில், ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற திருமால் கோயில்களில், செங்கற்பட்டு மாவட்டத்தில், மாமல்லபுரத்திற்கு அண்மையில் வடக்கே அமைந்துள்ள 'திருவிடந்தைக் கோயில்' ஒன்ருகும். 'திரு+இட+எந்தை' என்பது திருவிடந்தை என மருவி வழங்கி வருகிறது. "இடஎந்தை எந்தை பிரானே" என்பது திவ்வியப் பிரபந்தம். 'திருமகளைத் தனது இடப்பக்க மார்பின்கண் கொண்டுள்ள எந்தையாகிய திருமால் எழுந்தருளியுள்ள தலம்' என்பது, இதன் பொருள்.

இங்குள்ள மூலவராகிய பெருமாளுக்கு, ஆதிவராகப்பெருமாள் என்பது பெயர். இவர் இடப்பக்கத்துத் திருமார்பில் எழுந்தருளச் செய்துள்ள திருமகளுக்கு அகிலவல்லித்தாயார் என்று பெயர். ஆதி காலத்தில் பெருமாள் வராக அவதாரம் எடுத்துக் கடலில் இரணியனின் தம்பியாகிய இரணியாக்கன் என்பவன் மறைத்து வைத்த பூமிப்பிராட்டி யாகிய அகிலவல்லித்தாயாரை மீட்டுக் கொணர்ந்து, உலகத்தைக் காத்தருளினர் என்பது வரலாறு. அதனாலேயே இங்குள்ள மூலவருக்கு ஆதிவராகப் பெருமாள் என்றும், பிராட்டிக்கு அகிலவல்லித்தாயார் என்றும் காரணப்பெயர்கள் ஏற்பட்டன என்பர்.

இக்கோயிலின் உற்சவருக்கு நித்தியகலியாணப் பெருமாள் என்பது பெயர். திருமால் ஒருவரே புருடோத்தமர் ஆதலாலும், உயிரினங்களாகிய நாம் எல்லாம் அவர் அருளைப்பெற விழையும் பெண்மை இயல்பு உடையவர் ஆதலாலும், எல்லா உயிர்களுக்கும் நாள்தோறும் அருளின்பங்களை வழங்கித் தண்ணளி புரிந்து வருகின்ற இவருக்கு நித்தியகலியாணப் பெருமாள் எனப்பெயர் அமைந்தது என்று பெரியோர்கள் கூறுவர்.

இங்குத் தனிக்கோயில் கொண்டுள்ள நாச்சியாருக்குக் காமள வல்லித்தாயார் என்று பெயர் வழங்கும். இப்பெயரைத் திருமங்கை யாழ்வார், தம்முடைய பெரிய திருமொழியில்,

'அலங்கெழு தடக்கை ஆயன்வாய் ஆம்பற்கு
அழியுமால் என்உள்ளம் என்னும்!
புலங்கெழு பொருநீர் புட்குழி பாடும்
போதுமோ நீர்மலைக்கு என்னும்
குலங்கெழு கொல்லி கோமள வல்லிக்
கொடியிடை நெடுமழைக் கண்ணி
இலங்கெழில் தோளிக்கு, என்நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே!

என்னும் பாடலில் குறிப்பிட்டிருத்தல் காணலாம். இதனால் இக்கோயில் திருமங்கையாழ்வார் வாழ்ந்திருந்த காலத்திற்கும் முற்பட்ட, பழமையான கோயில் என்று தெளியலாம்.

இக்கோயிலில், அரங்கநாதப்பெருமாளுக்கும், அரங்கநாயகி நாச்சி யாருக்கும், தனிச் சந்நிதிகள் சிறப்புற அமைந்திருக்கின்றன. இதற்குக் காரணம், திருமங்கையாழ்வார் இங்கு வந்து பெருமாளைத் தரிசித்த பொழுது, பக்திமேலீட்டால் பிரேமை மிக்க பெண்மையியல்பு அடைந்து, தாய்ப்பாசுரமாகப் பதினொரு பாடல்களை அருளிச் செய்துள்ளமையே யாகும். இக்கோயிலில் விலையுயர்ந்த பண்டைக் காலத்துத் தந்தப் பல்லக்கு ஒன்று உள்ளது. அதில் திருமாலின் தசாவதார உருவங்கள் கலைநலம் பொலிய மிகவும் அழகாகச் செதுக்கப் பெற்றிருத்தல், நேரிற் கண்டு வியந்து மகிழத்தக்கதாகும். இங்கு வைகானச முறையில் பூசை நடைபெற்று வருகின்றது.

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர், அருகில் உள்ள 'நென்மலி' (நெம்மேலி) என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவரும், வாழ்நாள் முழுவதும் நைட்டிகப் பிரமசரிய விரதம் பூண்டு சிறந்த வைணவச் சான்றோர் ஆக விளங்கியவரும் ஆகிய திரு. ஆயிரங்காணி ஆளவந்தார் என்னும் பெரியார், இக்கோயிலுக்குப் பற்பல நல்ல அறக்கட்டளைகளை நிறுவி யுள்ளமை, சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

இக்கோயில், சென்னையில் இருந்து மாமல்லபுரம் போகும் வழியில், கோவளத்திற்கு அருகில், கடற்கரை யோரமாக, மிகவும் இயற்கையழகு வாய்ந்த, அமைதியான நல்ல சூழலில் விளங்குகின்றது. இவ்வழகிய சிறந்த பெருமாள் கோயிலைப் பக்தர்கள் அனைவரும், மாமல்லபுரம் செல்ல நேரும்போதெல்லாம் கண்டு வழிபட்டு மகிழலாம்.

# திருப்பாதிரிப்புலியூர் அருட்டிரு ஞானியாரடிகள்

திரு. க. கலியாணம், எம்.ஏ., டிப். எக்கான்.

திருக்கோவலூர் ஆதீனம் என்பது தமிழ்நாட்டுத் திருமடங்களில் ஒன்று. அதில் ஐந்தாம் பட்டமாக அமர்ந்து அருளாட்சி புரிந்தவர்கள் அருள்மிகு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள். திருப்பாதிரிப்புலியூர் மடத்திலேயே அவர்கள் அதிகமாகத் தங்கியிருந்தபடியால் திருப்பாதிரிப்பூலியூர் ஞானியார் சுவாமிகள் என்றே அழைக்கப் பெற்ருர்கள். அவ்வடிகளாரின் நூருவது பிறந்த நாள் 20-5-1973 அன்று வருகிறது. பொதுவாகத் தமிழ்நாட்டில் பல இடங்களிலும், சிறப்பாகத் திருப்பாதிரிப்புலியூரிலும் பிறந்தநாள் விழாக் கொண்டாடப்பெற இருக்கிறது. அதுபோழ்து அப்பெருந்திருவிஞரின் வாழ்க்கை வரலாற்றை நாம் எல்லாம் உய்யும் வண்ணம் சிந்திப்பது நம்முடைய தலேயாய கடமை.

கும்பகோணத்திற்கருகிலுள்ள பாடல்பெற்ற பதியான திருநாகேசுவரத்தில் சீமுக ஆண்டு வைகாசித் திங்கள் 4-ஆம் நாள் (17-5-1873) வியாழக்கிழமையன்று சுவாமிகள் தோன்றிஞர்கள். தந்தையார் அண்ணுமலே ஐயா; தாயார் பார்வதியம்மையார்; வீரசைவமரபினர். அடிகளாரின் பிள்ளேத் திருநாமம் பழநி என்பது. அக்காலத்தே திருக்கோவலூர் ஆதீனம் நான்காம் பட்டத்தே எழுந்தருளியிருந்த சீலத்திரு சிவசண்முகபரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் திருநாகேசுவரத் தோன்றலாருக்கு உறவினர். பழநி பிறந்த ஆறுதிங்களுக்குள் பெற்ருேருடன் திருப்பாதிரிப்புலியூருக்கு அழைத்து அத்திருமகவை மடத்திலேயே வளர்த்தார்கள். குழந்தை வளர்ந்து வந்தது. தமிழ், வடமொழி, ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம் முதலியவற்றைத் தகுந்த ஆசிரியர்கள் மூலம் கற்றது. 'எக்கலேயும் கற்றுணர்ந்தார் ஈரெட்டாண்டு அகவையினில்' என்று வாதவூரடிகளுக்குக் கூறியது இவர்களுக்குப் பொருந்தியது. நான்காம் பட்டத்துத் தலேவர் தமக்கு அந்திம காலம் அணுகுவதையறிந்து நமது அடிகளாரை ஐந்தாம் பட்டமாக 20-11-1889ல் அமர்த்திஞர்கள். அப்பொழுது சுவாமிகளுக்கு வயது பதினேழு.

பட்டத்திற்கு வந்த பின் சுவாமிகள் கல்வி, அறிவு, ஒழுக்கம், நாவன்மை முதலியவற்ருல் சிறந்து விளங்க வேண்டுமென்று எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்கும் உழைப்புக்கும் அளவில்லே. திருப்பாதிரிப் புலியூர் மடத்தில் வாணிவிலாச சபை என்ற ஒரு கழகத்தை அமைத்து நாட்டிலுள்ள பல பெரியோர்களேச் சொற்பொழிவாற்றச் செய்தார்கள். இராமநாதபுரம் மன்னர் குடும்பத்தைச் சார்ந்த பால வனத்தம் பாண்டித்துரைத்தேவர் அவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கம் தொடங்குவதற்கு மூலகாரணமாக இருந்தவர்கள் நம்முடைய சுவாமிகளேயாவார்கள். சைவசமயத்தைப் பாதுகாக்கவும் பரப்பவும் ஒரு பெருநிலேயம் அமைக்க வேண்டுமென்று பல பெரியோர்கள் கருதினுர்கள். அந்த எண்ணம் திருப்பாதிரிப்புலியூர்த் திருமடத்தில் தான் உருப்பெற்றது. திருவாளர்கள் ஜே. எம். நல்லசாமி பிள்ளே, நாகை வேதாசலம் பிள்ளே (பின்னர் மறைமலேயடிகளார்) இவர்களின் முயற்சியினுல் சைவ சித்தாந்த மகா சமாசம் ஞானியாரடிகளின் திரு முன்னர் 1905-ல் தோற்றுவிக்கப் பெற்றது. அந்த சமாசம் பல அரிய தொண்டுகள் செய்து கொண்டு திகழ்வது நாடறிந்ததொன்று.

தமிழ்நாடு முழுவதும் பல்லக்கிலேயே பயணம் செய்து, திருத்தலங்களே வழிபட்டு, சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி, மக்களே நன்னெறிப் படுத்தினுர்கள். அவர்களுடைய சொற்பொழிவுகள் ஒரு தனித்தன்மை வாய்ந்தவை; கல்லாரும் கற்ருரும் மற்றெல்லாரும் கேட்டுப் பயனடையும் பான்மையுடையவை; இனிமை, எளிமை, தெளிவு, பொருட் செறிவு, திட்பம், நுட்பம் இவை எல்லாம் அவற்றில் பொதிந்து மிளிரும்; சமயம், சாத்திரம், தோத்திரம், வரலாறு இவை பற்றிய சிறந்த கருத்துக்களுடன் விளங்கும். கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் நீண்ட நேரம்-குறைந்தது மூன்று மணி அளவு-சொற்பெருக்காற்றுவதில் அடிகளாருக்கு இணே அவர்களே. சுவாமிகளிடம் சமய இலக்கிய பாடங்களே முறையாகக் கேட்டுப் பயன் பெற்ருேர் பலர். அவர்களுடைய மாணவர்களில் பலர் இன்று பெரும்புலவர்களாக விளங்கக் காண்கிருேம். சைவ சித்தாந்த மகாசமாசம் போன்ற பல சமய மன்றங்களின் ஆண்டு விழாக்களிலும், சமயப் பேரவைகளிலும், மாநாடுகளிலும் ஆற்றிய சொற்பொழிவுகள் எண்ணில. அவர்கள் நடமாடும் பல்கலேக்கழகமாக இலங்கினுர்கள் என்று கூறினுல் அது மிகையாகாது. சைவசமயத்திற்கும், தமிழுக்கும் அவர்கள் செய்த சேவை அளப்பரிது; அளப்பரிது. அவர்களுடைய நூருவது பிறந்த நாள் விழாவின் போது அவர்களேப் போற்றி வணங்கிப் புனித மடைவோமாக.

# அருளோசை

பிற்சேர்க்கை மே 1973.

பாடம் 11 விஞவிடை சந்தா எண்............

இந்த இதழிலுள்ள கட்டுரைகள் பற்றிய விஞக்களேயன்றி பொது சமய அறிவுத் தொடர்பான கேள்விகளும் உள்ளன. விஞத்தாள்களிலன்றி வேறு தாள்களில் விடைகள் எழுதக் கூடாது. சொந்தக் கையெழுத்தில் எழுதி 31-5-1973 க்குள் இவ்வலுவலகத்தில் கிடைக்கும்படி அனுப்பவேண்டும்.

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. இருவகை விஞ்ஞானங்களுக்கு எடுத்துக்காட்டுக் கூறி விளக்குக.

2. 'திருவிடந்தை'யின் பெயர்க் காரணத்தையும், அக்கோயிலில் எழுந்தருளியுள்ள மூலவர், உற்சவமூர்த்திகளின் திருநாமங்களேயும் கூறுக.

3. பரஞானம், அபரஞானம் இவற்றிற்கு விளக்கம் தருக.

4. திருவெஃகாவில் கோயில் கொண்டெழுந்தருளிய பெருமானுக்கு 'சொன்னவண்ணஞ் செய்த பெருமாள்' என்ற பெயர்வரக் காரணம் என்ன ?

5. ஞானியாரடிகளின் சொற்பொழிவுத்திறனைச் சுருக்கமாக வரைக.

6. கடவுள் உண்மைக்குச் சிவஞானமுனிவர் கூறும் விளக்கம் என்ன?

7. எண்ணுதல் வாழ்க்கையில் வெற்றிக்கு அடிக்கல்-காரணம் கூறி விளக்குக.

8. மார்க்கண்டர் வரலாற்றால் அறிந்து கொள்ளப் பெறுவதென்ன?

9. உருவ வழிபாடு வேண்டுமா?

10. சிவன் கோயிலிலுள்ள சந்நிதிகளையும் அவை காணப்பெறும் இடங்களையும் சுருக்கமாகத் தருக.

கையெழுத்து

---

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இப்பகுதியில் விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600018.




அட்டைப்படம்

திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவுருவப் படத்தினையும், அவரைப் பற்றிய சிறந்த கட்டுரையினையும் வெளியிட்டமைக்குப்பாராட்டி என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

—ச. சிவகுமாரன், எம்.ஏ., சேலம்-4.

திருநட்சத்திரம்

நாயன்மார்களின் திருநட்சத்திரம் வரும் திங்களில் அவர்கள் திருவுருவப் படத்தையும் வரலாற்றினையும் தவருது வெளியிட வேண்டுகிறேன்.

—சாது தங்கவேல் சாமி, பிரப்பன் வலசை

[இத்திங்கள் இதழில் வைகாசி மூலத்தையொட்டி திருஞானசம்பந்தர் வரலாறு வெளிவருகிறது—ஆசிரியர்.]

வாழ வழி

நானில மீதில் நல்வாழ்வு வாழ நல்வழி கூறும் நல்லோசை தங்கள் "அருளோசை"

—இ. பாலசுப்பிரமணியம், இருளப்பபுரம்.

பயன் உள்ளது

"அருளோசை" மிகவும் பயன் உள்ளதாக இருக்கிறது.

—சு. அசோகன், ஆக்கூர்.

அனுப்பலாமா?

சமயச் சார்பான கட்டுரைகள் வரைந்து அனுப்பலாமா?

—எஸ். சுவாமிநாதன், ஆக்கூர்.

[ஏற்கெனவே நிறையக் கட்டுரைகள் வந்திருக்கின்றன—ஆசிரியர்]

அனுமதி கிடைக்குமா?

அடியேன் சில கதைகள் கவிதைகள், கட்டுரைகள் எழுதியுள்ளேன், அருளோசையில் வெளியிட அனுமதி கிடைக்குமா?

—சி. வ. சுப்பையாபிள்ளை, மூவலூர்.

[கவிதைகள் வெளியிடுவதில்லை. கட்டுரைகள் நிறைய இருக்கின்றன. சமயச் சார்பான கதைகள் வேண்டுமானல் அனுப்பலாம். இடமிருப்பின் வெளியிடப்பெறும்—ஆசிரியர்.]

அறிவுக்கண்

'அருளோசை' தனைப் படிக்க அறிவுக்கண் திறக்கும்.

—டி. ஆர். கருப்பசாமி, தேவராயநேரி.

தெள்ளத்தெளிய

பழனியாண்டவர் திருவுருவச் சிறப்பினைத் தெள்ளத் தெளிய விளக்கியமைக்கு நன்றி.

—ஜே. ஞானமூர்த்தி, வேதாரண்யம்.

ஆழ்ந்த கருத்து

அறிவைப்பற்றிய கட்டுரை ஆழ்ந்த கருத்துடையதாக இருந்தது.

—சா. சங்கரநாராயணன், திருமருகல்.